

॥ आदित्यहृदयम् ॥
ஸ்ரீராமபிரானுக்கு அகஸ்திய முனிவர்
உபதேசித்த
ஆதித்ய ஹ்ருதயம்
டாக்டர்
வே. ராகவன்
ஜோதி நிலையம்
Acc. No. 6938

# ஸ்ரீ ஆசார்யாளின் அருள்வாக்கு

ஸ்ரீ ராமன் யுத்தத்தில் வெற்றிபெருவதற்காக அகஸ்திய முனிவர் உபதேசித்த 'ஆதித்ய ஹ்ருதயம்' என்ற ஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்தார். இது வால்மீகி ராமாயணம் யுத்த காண்டம் 107ம் ஸர்க்கமாகும்.

**ஆதித்ய ஹ்ருதயம் புண்யம்**
**ஸர்வசத்ரு விநாசனம் ।**
**ஜயாவஹம் ஜபேந்நித்யம் ॥**

இந்த ஸ்தோத்ரத்தை நாம் ஒவ்வொருவரும் பாராயணம் செய்வது நமது தேச வெற்றிக்கு உதவியாக இருக்கும்.

***(சீனர் ஆக்ரமிப்பை எதிர்க்க விடுத்த ஆசிச்செய்தியிலிருந்து)***

॥ श्रीमद्वाल्मीकिरामायणे अगस्त्यमहर्षिप्रोक्तम्

# आदित्यहृदयम् ॥

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில்

அகஸ்திய மஹரிஷி ஸ்ரீராமனுக்கு உபதேசித்த

# ஆதித்யஹ்ருதயம்

தேவநாகரி, தமிழ் லிபிகளில் ஸம்ஸ்க்ருத மூலமும்

தமிழ் உரையும்.

டாக்டர் வே. ராகவன்






பாமதிநூல்கள் 4 விலை 25 பைசா

ஜோதி நிலையம்

சென்னை 18

உ

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

# ஸ்ரீ சங்கராசார்யஸ்வாமிகள் ஸ்ரீ மடம்,
# காஞ்சீபுரம்

முகாம் திருமலை திருப்பதி  श्रीः  தேதி 24—6—66

'ஜோதி ப்ரசுரம்' என்னும் தலைப்புடன் நூல்களை வெளியிடும் ஸ்ரீஜயராமன் ப்ராசீன மஹான்கள் அனுக்ரஹித்துள்ள ஸ்தோத்ரங்களை பல அறிஞர்களைக் கொண்டு எழுதப்படும் தமிழ் உரையுடன் வெளியிட முன்வந்திருப்பதையும் முதலில் ஸ்ரீபக்வத்பாதாசார்யாள் ஒரு ஏழைப் பெண்மணிக்காக அருளியுள்ள லக்ஷ்மீஸ்தோத்ர ரூபமான கனகதாரா ஸ்தோத்ரத்தை சென்னை ஸர்வகலாசாலை ஸம்ஸ்கிருத பேராசிரியர் கவிகோகில ஸ்ரீ ராகவன் இயற்றியுள்ள தமிழ் உரையுடன் ப்ரசுரிக்க இருப்பதையும் அறிந்து ஸ்ரீமஹா ஸந்நிதானத்தில் ஸந்தோஷிக்கிறார்கள்.

ஸ்ரீஜயராமனின் இம்முயற்சி பக்தர்களின் ஆதரவினால் மேன் மேலும் வளர்ச்சி யடையுமாறு ஸ்ரீமஹா ஸந்நிதானத்தில் அனுக்ரஹிக்கிறார்கள்.

ஆக்ஞைப்படி

**எஸ். சாம்பமூர்த்தி சாஸ்திரி**

மானேஜர்

ஸ்ரீ:

# ஸ்ரீ ஆசார்யாளின் அருள்வாக்கு

## இராமாவதாரம்

நல்ல காரியத்தைச் செய்வதற்கு எது நல்லது என்று முதலில் தெரிந்திருக்கவேண்டும். இதை எடுத்துச் சொல்ல ஏற்பட்டவையே வேதங்களும், இதிஹாஸங்களும் ஸ்மிருதிகளும், தர்ம சாஸ்த்ரங்களும். இவற்றில் பொதிந்துள்ள உண்மைகள் மனித அறிவினுல் கண்டு பிடிக்கப்பட்டவை அல்ல. அவை நிரந்தரமான உண்மைகள். அவையே ஸநாதன தர்மங்கள். முடிவான மோக்ஷத்துக்குச் சாதனமான எந்தவித அறவழியை அவசியம் பின்பற்றவேண்டும் என்பதை அவை எடுத்துரைக்கின்றன.

ஆனுல் அறவழியைக் கடைப்பிடித்து ஒழுகுவதில் அடிக்கடி யுகத்துக்கு யுகம், இடையூறுகள் ஏற்படுகின்றன. தன்னைப் பொறுத்த இடையூறுகள் சில. இவற்றைத் தன்னுடைய தவச் சக்தியினுலும் நெறிமுறைகளாலும் கடந்துவிடலாம். அப்படித்தான் கடக்கவேண்டும். மற்றும் சில இடையூறுகள் மனிதத்தன்மையைப் பொறுத்தவை. அவற்றைச் சமாளிக்க தன்னுடைய சொந்த முயற்சி மட்டும் போதாது. தர்மத்துக்கு விரோதியாக இருப்பவர்கள் மிதமிஞ்சிய பலம் அடைந்து சாதாரண மக்களுக்குக் கிடைக்காத உயர்ந்த ஆயுத பலமும் பெற்று விட்டால் அவர்களை அடக்கத் தர்மத்திலும் நல்வழியிலும் நிரந்தரமாக நிலைத்துள்ள ஒரு சக்தியினுல் தான் முடியும். ‘அசுர’ சம்பத்து மேலோங்கித் தருமத்தை அழிக்க முற்பட்டால் அதை ஒடுக்க ‘தெய்வ’ சம்பத்தையே வடிவமாகக் கொண்ட ஒரு திவ்ய புருஷனுலோ, தேவதையினுலோதான் முடியும். அவர்களுடைய உதவியில்லாமல் அதர்மத்தை ஒழிக்க முடியாது.

இந்தக் கருத்தைக் கொண்டுதான் ராமாயணத்தையும் கவனிக்கவேண்டும். எல்லா அவதாரங்களையும் போலவே ராமாவதாரமும் துஷ்டநிக்ரஹமும் (தீயவரை ஒடுக்குதலும்) சாது பரித்ராணமுமே (நல்லோரைப் பாதுகாத்தலுமே). எங்கெல்லாம் தீமையும் அதர்மமும் தலைதூக்குகின்றனவோ, அங்கங்கே அவற்றை ஒடுக்குவதன் மூலம் நன்மையும் தர்மமும் நிலைநாட்டப்படுவதை ராமாயணத்தில் பார்க்கலாம்.

ஸ்ரீராமன் தர்மத்தின் வடிவம். வனத்துக்குப் புறப்படும் சமயத்தில் ஆசிமொழி கூறும்போது "கோசலை எந்த தர்மத்தை நீ உறுதியுடனும் நியமத்துடனும் பாதுகாத்தாயோ" என்று அடைமொழி கொடுத்துச் சொல்லுகிறாள். "தன்னைப் பாதுகாப்பவனை தர்மம் பாதுகாக்கிறது" (தர்மோ ரக்ஷதி ரக்ஷித:) என்ற உண்மையைக் கோசலை நன்கு உணர்ந்திருந்தாள்.

தர்மம் சாதுக்களின் வாழ்க்கையில் நிலைத்து நிற்கிறது. சாதுக்களைப் போஷிப்பதன் மூலம் தர்மமும் போஷிக்கப் படுகிறது. சாது பரித்ராண மூலம் தர்ம ஸ்தாபனமும் நிகழுகிறது. சாதுக்களைத் துன்புறுத்தும் துஷ்டர்களை நிக்ரஹம் செய்வதும் சாது பரித்ராணத்தில் அடங்கியுள்ளது.

ராவணன் பிரம்மாவின் கொள் பேரன். அந்தணர்களில் முதல்வன், ராவணனுடைய கொடுமையினின்று உலகத்தைப் பாதுகாப்பதாகத் தான் அளித்த வாக்கை ராவண ஸம்ஹாரத்தின் மூலம் காப்பாற்றிக் கொண்டான் ஸ்ரீராமன்.

அசுர சம்பத்தை எதிர்த்துப் போராடியது தெய்வ சம்பத்து என்பதும், பாவத்தின் விளைவு மரணம் என்பதும், இந்த இரண்டு விஷயங்களிலும் எடுத்துக் காட்டப்படுகின்றன. உலக க்ஷேமத்தைக் குலைத்து அமைதியான வாழ்க்கையைக் கெடுப்பவர்களை எதிர்த்துப் போராடவும் அவசியமானால் அவர்களை வதைக்கவும் தயங்கக் கூடாது என்பது இதிலிருந்து தெரிகிறது. தர்ம சாஸ்திர விதிகளுக்கு

விரோதமாக இம்மாதிரி செய்கை அமைந்து விடுகிறதே என்று மேலெழுந்த வாரியாகத் தோன்றினாலும் அதற்காகப் பின்னடையக் கூடாது. தர்மஸூக்ஷ்மம் சாதாரண மக்களின் அறிவுக்குச் சுலபமாக விளங்காது.

தீமை எந்த இடத்தில் காணப்பட்டாலும் அது ஒடுக்கப் படவேண்டும் என்பது தான் ராமாயணத்தின் சாரமான நீதி. தர்மத்தில் ராமனுக்கு இருந்த பற்றுதல் எள்ளளவு சந்தேகத் துக்கும் இடமில்லாதது. தர்மத்தை பரிபாலிப்பதில் தான் மட்டும் திருப்தியடையாமல் உலகத்தோர்களும் தான் தர்ம பரிபாலனம் செய்வதை உணரவேண்டும் என்பதையும் விரும்பினான் ஸ்ரீராமன். அதற்காகவே சீதாதேவி இரண்டு முறை சோதனைக்கு உள்ளானாள். அக்னி பிரவேசம் செய்த தன் மூலமும், இரண்டாவது தடவை கானகம் சென்றதன் மூலமும் ஸ்ரீ ராமனுடைய தர்ம ஸ்தாபனத்தில் தன் பங்கை சீதாதேவி மேற்கொண்டிருக்கிறாள்.

ராமாயணத்தில் நாராயணனே மனிதனாக அவதரித்தார். எந்த விதமான கஷ்டங்கள் ஏற்பட்டாலும், எப்படிப்பட்ட இடையூறுகள் நேர்ந்தாலும், மனோதிடம் குன்றாமல், தர்மத் தில் நிலைத்து நிற்கவேண்டும் என்பதைச் சாதாரண ஜனங் களுக்கு ஸ்ரீராமன் நடத்திக் காட்டவே மனிதனாய்த் தோன்றி வாழ்ந்தான். பிறப்பில்லாத சத்யவஸ்து பிறவி எடுத்து மானிட உருக் கொண்டது, மனித உள்ளங்களில் அற நெறியை நிலைக்கச் செய்வதற்காகத் தான்.

ராமாயணம் தெய்விகக் கதை. எப்போதெல்லாம் உலகத்தில் (தீமை) அதர்மம் மேலோங்கி வளர்ந்து, தெய்வத் தின் உதவியின்றி அவற்றை ஒடுக்க முடியாது என்ற நிலைமை உண்டாகிறதோ அப்போதெல்லாம், இம்மாதிரி அவதாரங்கள் நிகழும். துஷ்டர்களின் இருதயத்திலும் தெய்வ சம்பத்தை நிலைநாட்ட இம்மாதிரி அவதாரங்கள் அவசியமாகின்றன.

———

## வேதம் போற்றும் ஸூர்யன்

### "सूर्य आत्मा जगतस्तस्थुषश्च"

"ஸூர்யன் தாவர ஜங்கமப் பொருளனைத்திற்கும் ஆத்மா" என்று உலகிற்கெல்லாம் உள்ளிருக்கும் உயிராய் சூரியனை வேதம் போற்றுகிறது. சூரிய மந்த்ரங்களும், துதி களும், வழிபாடுகளும் வேதங்களில் ஏராளமாய் காணப்படும். எல்லா ஒளிகளுக்கும் மூலவொளி, காலப்போக்கு, ஆக்கம், வாழ்வு, அழிவு; உயிர் எல்லாவற்றிற்கும் அடிப்படை சூர்யனே. பல தைவங்களாயும், பலவித விழாக்கள், வழிபாடுகள் மூலம் தொழப்படும் தெய்வமாயும் விளங்குவதும் சூர்யனே. பரம் பொருளையும் ஆதித்ய மண்டலத்தின் நடுவே இருக்கும் புருஷனையும், நாராயணனையும், சிவனையும் த்யானம் செய்யவேண்டும் என்று சாஸ்த்ரங்கள் சொல்லு கின்றன. மந்த்ரங்களுக்குள் தலைசிறந்ததான காயத்ரி மந்த்ரத்தின் தேவதையும் சூர்யனே. சூர்யனுக்கென்று தனி உபநிஷத்துகளுமிருக்கின்றன. சூர்ய உருவான ஒளியே வேத உருவான ஒலி; காலையில் ரிக்காகவும், உச்சி வேளையில் யஜுஸ்ஸாகவும், மாலையில் ஸாமமாகவும் சூர்யனே விளங்குகிறான்.

முக்யமாய் ஆயுளையும் ஆரோக்யத்தையும் பாஸ்கர னிடம் வேண்டிக் கொள்ளவேண்டும் என்று சொல்லப் படுகிறது. (ஆரோக்₃யம் ப₄ாஸ்கராத் இச்சே₂த்).

வேதத்திற்கு அடுத்தபடியாக மஹாபாரதத்திலும் ராமாயணத்திலும் பல இடங்களில் சூர்யனின் மஹிமை சொல்லப்படுகிறது. ராமாயணம் முக்யமாய் சூர்யவம்சக்

கதை. இதில் யுத்தகாண்டத்தில் அகஸ்த்ய மஹரிஷி ராமருக்கு வெற்றி கிடைக்கவேண்டி ராவணவதத்திற்குமுன் சூர்யனின் துதியான ஆதித்ய ஹ்ருதயத்தை உபதேசிக்கிருர் ; இதை மூன்று தரம் ஜபித்து ராமர் ராவணனைக் கொன்று வெற்றியடைகிருர். ஊக்கம் ஏற்படவும், ஆற்றல் வளரவும், எல்லாக் காரியங்களிலும் வெற்றி கை கூடவும், இந்த ஆதித்ய ஹ்ருதயத்தை எல்லோரும் ஓதலாம்.

அநேகமாக புராணங்கள் எல்லாவற்றிலும் பலவிடங்களில் சூர்யனுடைய மஹிமையும் உபாஸனையும் சொல்லப்படுகிறது. ஸாம்ப புராணம், பவிஷ்யோத்தரம் இரண்டும் சூர்ய வழிபாட்டை முக்யமாய் கொண்டவை. பவிஷ்யோத்தர புராணத்தைச் சார்ந்ததாயும், க்ருஷ்ணார்ஜுன ஸம்வாத உருவாயும் இருக்கும் மற்ரெரு ஆதித்ய ஹ்ருதயமும் உண்டு. ராமாயணத்திலுள்ளதை விட பவிஷ்யோத்தர புராணத்திலுள்ள ஆதித்ய ஹ்ருதயம் கொஞ்சம் பெரியது ; 170 ச்லோகங்கள் கொண்டது. பத்மபுராணம், மஹாபாரதம் இவ்விரண்டிலும் இருப்பதாக சிறியதோர் ஆதித்ய ஹ்ருதயம் மேலே சொன்ன இரண்டிலிருந்து வேறுபட்டதாக காணப்படும். 'ஆதித்ய ஹ்ருதயம்' மந்த்ரமாகவும் போற்றப்பட்டது ; சில தந்த்ர நூல்களிலும் ஆதித்ய ஹ்ருதயமொன்று இடம் பெற்றிருக்கிறது.

ஆனல் நம் தென்னுட்டில் மிகவும் புகழ் பெற்றதும் பழக்கப்பட்டதும், நாள்தோறும் ஓதப்பட்டு வருவதுமான ஆதித்ய ஹ்ருதயம் ராமாயணத்தில் காணப்படுவதும், அகஸ்த்யர் ராமனுக்கு உபதேசித்ததும், ராவணவதத்திற்கு ஸாதகமாயிருந்ததுமான இந்த ஆதித்ய ஹ்ருதயமே. அதே இங்கு தமிழ் உரையுடன் தரப்பட்டிருக்கிறது. இறுதியில் சொல்லப்படும் பலச்ருதியின்படி இதை மும்முறை தினமும் ஓதுபவர் எந்த கஷ்டத்திலும், பயத்திலும், நெருக்கடியிலும்

இருந்தாலும் விடுபடுவர், எந்தப் போராட்டத்திலும் வெற்றி பெறுவர்.

முன் வெளிவந்த துதி நூல்களைத் தயாரிப்பதில் உதவியதைப்போலவே இந்த 'ஆதித்ய ஹ்ருதயத்தை'யும் எழுதி அச்சிற்குத் தயாரிப்பதில் எனக்கு துணைபுரிந்த என் குமாரி ரா. ப்ரியம்வதாவுக்கும், இந்த ஸ்தோத்ர நூல் தொடரை வெளியிட முன்வந்த ஸ்ரீஜயராமன் அவர்களுக்கும் ஸ்ரீ ஸூர்ய நாராயணன் தன் அருளைத் தந்து, எடுத்த காரியங்கள் விரைவிலே கைகூடுமாறு செய்யட்டும்.

வே. ரா.

---








॥ श्रीमद्वाल्मीकिरामायणे अगस्त्यमहर्षिप्रोक्तम्

# आदित्यहृदयम् ॥

ततो युद्धपरिश्रान्तं समरे चिन्तया स्थितम् ।
रावणं चाग्रतो दृष्ट्वा युद्धाय समुपस्थितम् ॥ १ ॥
दैवतैश्च समागम्य द्रष्टुमभ्यागतो रणम् ।
उपागम्याब्रवीद्राममगस्त्यो भगवानृषिः ॥ २ ॥

ததோ யுத்$_3$த$_4$ பரிச்ராந்தம் ஸமரே சிந்தயா ஸ்தி$_2$தம் ।
ராவணம் சாக்$_3$ரதோ த்$_3$ருஷ்ட்வா யுத்$_3$தா$_4$ய ஸமுபஸ்தி$_2$தம்॥
தை$_3$வதைச்ச ஸமாக$_3$ம்ய த்$_3$ரஷ்டுமப்$_4$யாக$_3$தோ ரணம் ।
உபாக$_3$ம்யாப்$_3$ரவீத்$_3$ராமமக$_3$ஸ்த்யோ ப$_4$க$_3$வான் ரிஷிஃ ॥2॥

பிறகு போரில் களைப்புற்று கவலையுடன் நின்றுகொண்டிருக்கும் ராமனையும், எதிரில் சண்டைக்காக நின்றுகொண்டிருக்கும் ராவணனையும் பார்த்து, அந்த ராம ராவண யுத்தத்தைப் பார்ப்பதற்காக தேவர்களோடுகூட வந்த பகவான் அகஸ்த்யமஹரிஷி ராமனை அணுகி சொன்னார் :

राम राम महाबाहो शृणु गुह्यं सनातनम् ।
येन सर्वानरीन्वत्स समरे विजयिष्यसि ॥ ३ ॥

ராம ராம மஹாபா₃ஹோ ச்ருணு கு₃ஹ்யம் ஸநாதனம்
யேன ஸர்வானரீன் வத்ஸ ஸமரே விஜயிஷ்யஸி ॥ 3 ॥

"ஹே ராமா! பெரும் தோளுடையவனே! ரஹஸ்யமும் சாச்வதமும் ஆன மந்திரத்தைக்கேள்; குழந்தாய், இம் மந்திரத்தைக் கொண்டு போரில் எல்லா எதிரிகளையும் ஜயிப்பாய்.

आदित्यहृदयं पुण्यं सर्वशत्रुविनाशनम् ।
जयावहं जपेन्नित्यमक्षय्यं परमं शिवम् ॥ ४ ॥
सर्वमङ्गलमङ्गल्यं सर्वपापप्रणाशनम् ।
चिन्ताशोकप्रशमनमायुर्वर्धनमुत्तमम् ॥ ५ ॥

ஆதி₃த்யஹ்ருத₃யம் புண்யம் ஸர்வசத்ரு விநாசனம் ।
ஜயாவஹம் ஜபேந்நித்யமக்ஷய்யம் பரமம் சிவம் ॥ 4 ॥
ஸர்வமங்க₃ள மங்க₃ல்யம் ஸர்வபாப ப்ரணாசனம் ।
சிந்தாசோகப்ரசமனமாயுர்வர்த₄னமுத்தமம் ॥ 5 ॥

இந்த ஆதித்ய ஹ்ருதயம் புனிதமானது, எல்லா எதிரிகளையும் அழிப்பது, வெற்றியைத் தருவது, அழிவற்றதும் மிகவும் உயர்ந்ததுமான நன்மையைப் பயக்கவல்லது; எல்லா மங்களங்களுக்கும் மங்களத்தைக் கொடுப்பது; எல்லா பாபங்களையும் அழிப்பது; கவலையையும் துயரத்தையும் அடக்குவது; ஆயுளை வளர்ப்பதில் சிறந்தது; இதை ஒருவன் எப்பொழுதும் ஜபிக்கவேண்டும்.

रश्मिमन्तं समुद्यन्तं देवासुरनमस्कृतम् ।
पूजयस्व विवस्वन्तं भास्करं भुवनेश्वरम् ॥ ६ ॥

ரச்மிமந்தம் ஸமுத்₃யந்தம் தே₃வாஸுர நமஸ்க்ருதம் ।
பூஜயஸ்வ விவஸ்வந்தம் பா₄ஸ்கரம் பு₄வனேச்வரம் ॥ 6 ॥

கிரணங்களோடு உதயமாகும், தேவரும் அஸுரரும், வணங்கும் ஒளியை உண்டுபண்ணி தன் ஒளியால் பிற ஒளியை மறைக்கும், உலகிற்கெல்லாம் ஈச்வரனான ஸூர்யனை பூஜை செய்.

सर्वदेवात्मको ह्येष तेजस्वी रश्मिभावनः ।
एष देवासुरगणान् लोकान्पाति गभस्तिभिः ॥ ७ ॥

ஸர்வதே₃வாத்மகோ ஹ்யேஷ தேஜஸ்வீ ரச்மிபா₄வனः ।
ஏஷ தே₃வாஸுரக₃ணான் லோகான் பாதி க₃ப₄ஸ்திபி₄: ॥ 7 ॥

தேஜஸுக்கும் கிரணங்களுக்கும் உறைவிடமான இந்த ஸூர்யன் எல்லா தேவதைகளுடைய உருவாகவும் இருக்கிறானல்லவா? இந்த ஸூர்யன் தேவாஸுரக் கூட்டங்களையும் தன் கிரணங்களால் காப்பாற்றுகிறான்.

एष ब्रह्मा च विष्णुश्च शिवः स्कन्दः प्रजापतिः ।
महेन्द्रो धनदः कालो यमः सोमो ह्यपां पतिः ॥ ८ ॥

ஏஷ ப்₃ரஹ்மா ச விஷ்ணுச்ச சிவ: ஸ்கந்த₃: ப்ரஜாபதி: ।
மஹேந்த்₃ரோ த₄னத₃: காலோ யம: ஸோமோ ஹ்யபாம்பதி: ॥

இவனே பிரும்மா, விஷ்ணு, சிவன், ஸ்கந்தன், ப்ரஜாபதி, இந்திரன், குபேரன், காலரூபி, யமன், சந்திரன், வருணன்.

पितरो वसवः साध्या ह्यश्विनौ मरुतो मनुः ।
वायुर्वह्निः प्रजाप्राण ऋतुकर्ता प्रभाकरः ॥ ९ ॥

பிதரோ வஸவஃ ஸாத்₄யா ஹ்யச்விநௌ மருதோ மநுஃ ।
வாயுர்வஹ்நிஃ ப்ரஜாப்ராணஃ ருதுகர்த்தா ப்ரபா₄கரஃ ॥9॥

(இவனே) பித்ருக்கள், வஸுக்கள், ஸாத்யர்கள், அச்வினி குமாரர்கள், மருத்தேவதைகள், மனு, வாயு, அக்னி, மக்களின் உயிர், அந்தந்த ருதுக்களை செய்பவன், ஒளியை ஆக்குபவன்.

आदित्यः सविता सूर्यः खगः पूषा गभस्तिमान् ।
सुवर्णसदृशो भानुर्हिरण्यरेता दिवाकरः ॥ १० ॥

ஆதி₃த்யஃ ஸவிதா ஸூர்யஃ க₂க₃ஃ பூஷா க₃ப₄ஸ்திமான் ।
ஸுவர்ணஸத்₃ருசோ பா₄நுர்ஹிரண்யரேதா தி₃வாகரஃ ॥10॥

(எல்லாவற்றையும்) விழுங்குபவன், ஆக்குபவன், வ்யாபித்திருப்பவன், வானைக் கடப்பவன், (எல்லாவற்றையும்)தன் கிரணங்களால் போஷிப்பவன், தங்கம்போல் ஒளிர்பவன், உருக்கிய தங்கம்போல் இருப்பவன், பகலை ஆக்குபவன்.

हरिदश्वः सहस्रार्चिः सप्तसप्तिर्मरीचिमान् ।
तिमिरोन्मथनः शंभुस्त्वष्टा मार्ताण्ड अंशुमान् ॥ ११ ॥

ஹரித₃ச்வஃ ஸஹஸ்ரார்சிஃ ஸப்தஸப்திர் மரீசிமான் ।
திமிரோன்மத₂நஃ சம்பு₄ஸ்த்வஷ்டா மார்தாண்ட₃ அம்சுமான்॥

ஏழு பச்சைக் குதிரைகளைக் கொண்டவன், கணக்கற்ற கிரணங்கள் படைத்தவன், இருளை அழித்து நன்மை பயக்குபவன், உருவங்களை ஆக்குபவன், தன் கிரணங்களால் உயிரற்ற உலகிற்கு உயிரைக் கொடுப்பவன்.

हिरण्यगर्भः शिशिरस्तपनो भास्करो रविः ।
अग्निगर्भोऽदितेः पुत्रः शङ्खः शिशिरनाशनः ॥ १२ ॥

ஹிரண்யக₃ர்ப₄: சிசிரஸ்தபனோ பா₄ஸ்கரோ ரவி: ।
அக்₃னிக₃ர்போ₄ அதி₃தே: புத்ர: சங்க₂: சிசிரநாசன: ॥12॥

உலகைப் படைக்கும் ஹிரண்யகர்பன்; குளிரும் இவனே, வெய்யிலும் இவனே; பாஸ்கரன், ரவி, தனக்குள் நெருப்பை வைத்துக்கொண்டிருப்பவன், அதிதியின் புதல்வன், சிப்பிபோல் ஒளிர்பவன், பனியை அழிப்பவன்.

व्योमनाथस्तमोभेदी ऋग्यजुःसामपारगः ।
घनवृष्टिरपां मित्रं विन्ध्यवीथीप्लवंगमः ॥ १३ ॥

வ்யோமநாத₂ஸ்தமோபே₄தீ₃ ரிக்₃யஜு:ஸ்ஸாமபாரக₃: ।
க₄னவ்ருஷ்டிரபாம் மித்ரம் விந்த்₄யவீதீ₂ப்லவங்க₃ம: ॥13॥

வானின் தலைவன், இருளைத் தகர்ப்பவன், மூன்று வேதங்களையும் வியாபித்திருப்பவன், மேகங்களின் மழையும் இவனே, நீரின் தோழன், (தென்நோக்கிச் செல்லும்போது) விந்திய மலையின் வழியே பாய்ந்து செல்பவன்.

आतपी मण्डली मृत्युः पिङ्गलः सर्वतापनः ।
कविर्विश्वो महातेजा रक्तः सर्वभवोद्भवः ॥ १४ ॥

ஆதபீ மண்ட₃லீ ம்ருத்யு: பிங்க₃ல: ஸர்வதாபன: ।
கவிர்விச்வோ மஹாதேஜா ரக்த: ஸர்வப₄வோத்₃ப₄வ: ॥ 14 ॥

வெப்பமாயும், வட்டமாயும், செந்நிறமாயும், வாட்டும் ம்ருத்யுவாயும் இருப்பவன்; எல்லாவற்றையும் பார்ப்பவன், தானே எல்லாமாயும் இருப்பவன் ; பேரொளிகொண்டவன், அன்பு கொண்டவன், பிறப்பதற்கெல்லாம் பிறப்பிடமானவன்.

नक्षत्रग्रहताराणामधिपो विश्वभावनः ।
तेजसामपि तेजस्वी द्वादशात्मन्नमोऽस्तु ते ॥ १५ ॥

நக்ஷத்ரக்3ரஹதாராணுமதி4போ விச்வபா4வனः ।
தேஜஸாமபி தேஜஸ்வீ த்3வாத3சாத்மந்நமோ'ஸ்து தே ॥ 15 ॥

நக்ஷத்ரம், கிரஹம், தாரகைகள் இவற்றிற்கெல்லாம் தலைவன், உலகிற்கு காரணமானவன், ஒளிகளுக்கெல்லாம் ஒளி கொடுப்பவன்; பன்னிரண்டு ஆதித்யர்களாயிருக்கும் சூர்யனே, உனக்கு நமஸ்காரம்.

नमः पूर्वाय गिरये पश्चिमायाद्रये नमः ।
ज्योतिर्गणानां पतये दिनाधिपतये नमः ॥ १६ ॥

நமः பூர்வாய கி3ரயே பச்சிமாயாத்3ரயே நமः ।
ஜ்யோதிர்க3ணும் பதயே தி3ணுதி4பதயே நமः ॥ 16 ॥

(நீ உதயமாகும்) கிழக்கு மலைக்கு நமஸ்காரம்; (நீ அஸ்தமனமாகும்) மேற்கு மலைக்கு நமஸ்காரம்; ஜ்யோதிர் மண்டலத்திற்கு தலைவனுன உனக்கு நமஸ்காரம்; பகலின் தலைவனுன உனக்கு நமஸ்காரம்.

जयाय जयभद्राय हर्यश्वाय नमो नमः ।
नमो नमः सहस्रांशो आदित्याय नमो नमः ॥ १७ ॥

ஜயாய ஜயப4த்3ராய ஹர்யச்வாய நமோ நமः ।
நமோ நமः ஸஹஸ்ராம்சோ ஆதி3த்யாய நமோ நமः ॥ 17 ॥

வெற்றியும், நன்மையாயும் இருக்கிற உனக்கு நமஸ்காரம். பச்சைக் குதிரைகள் ஏறிவரும் உனக்கு நமஸ்காரம். ஆயிரம் கதிர்கள் கொண்ட சூர்யனே ! நமஸ்காரம். ஆதித்யனுன உனக்கு நமஸ்காரம்.

**नम उग्राय वीराय सारङ्गाय नमो नमः ।**
**नमः पद्मप्रबोधाय मार्ताण्डाय नमो नमः ॥ १८ ॥**

நம உக்3ராய வீராய ஸாரங்கா3ய நமோ நம: ।
நம: பத்3மப்ரபோ3தா4ய மார்தாண்டா3ய நமோ நம: ॥ 18 ॥

கடுமையாயும் எல்லாவற்றையும் தூண்டுபவனாயும். விரைந்து செல்பவனாயும், தாமரையை மலரச் செய்பவனாயும், உயிரற்ற உலகிற்கு உயிரைக் கொடுப்பவனாயும் இருக்கிற உனக்கு நமஸ்காரம்.

**ब्रह्मेशानाच्युतेशाय सूर्यायादित्यवर्चसे ।**
**भास्वते सर्वभक्षाय रौद्राय वपुषे नमः ॥ १९ ॥**

ப்3ரஹ்மேசானச்யுதேசாய ஸூர்யாயாதி3த்யவர்சஸே ।
பா4ஸ்வதே ஸர்வப4க்ஷாய ரௌத்3ராய வபுஷே நம: ॥ 19 ॥

ப்ரும்மா, விஷ்ணு, சிவன் மூவருக்கும் அதிபனாகவும், பன்னிரண்டு ஆதித்யர்களாக ஒளிர்பவனாகவும், எல்லாவற்றையும் விளக்குபவனாகவும், அனைத்தையும் விழுங்கும் கொடும் உருவை உடையவனாகவும் இருக்கும் சூர்யனுக்கு நமஸ்காரம்.

**तमोघ्नाय हिमघ्नाय शत्रुघ्नायामितात्मने ।**
**कृतघ्नघ्नाय देवाय ज्योतिषां पतये नमः ॥ २० ॥**

தமோக்4னாய ஹிமக்4னாய சத்ருக்4னாயாமிதாத்மனே ।
க்ருதக்4னக்4னாய தே3வாய ஜ்யோதிஷாம் பதயே நம: ॥20॥

இருளையும் பனியையும் போக்குகிறவனாயும், பகைவரை ஒழிப்பவனாகவும், அளவுகடந்த தன்மையை உடையவனாகவும், நன்றிகெட்டவரை ஒழிக்கும் தெய்வமாகவும், எல்லா ஒளிகளுக்கும் தலைவனாகவும் இருக்கும் உனக்கு நமஸ்காரம்.

तप्तचामीकराभाय वह्नये विश्वकर्मणे ।
नमस्तमोभिनिघ्नाय रवये लोकसाक्षिणे ॥ २१ ॥

தப்தசாமீகராபா₄ய வன்ஹயே விச்வகர்மணே ।
நமஸ்தமோபி₄நிக்₄னாய ரவயே லோகஸாக்ஷிணே ॥21॥

உருக்கிய தங்கத்தின் ஒளியை உடையவனாகவும், அனல் உருவாகவும், உலகை ஆக்கும் விச்வகர்மாவாகவும், இருளை நீக்குபவனாகவும், உலக ஸாக்ஷியாயும் இருக்கும் ரவிக்கு நமஸ்காரம்.

नाशयत्येष वै भूतं तदेव सृजति प्रभुः ।
पायत्येष तपत्येष वर्षत्येष गभस्तिभिः ॥ २२ ॥

நாசயத்யேஷ வை பூ₄தம் ததே₃வ ஸ்ருஜதி ப்ரபு₄: ।
பாயத்யேஷ தபத்யேஷ வர்ஷத்யேஷ க₃ப₄ஸ்திபி₄: ॥ 22 ॥

இந்த சூர்யனே உலகத்திற்கு அதிபதியாய் இருந்து அதை அழித்து மறுபடியும் ஆக்குகிறான், இவனே தன் கதிர்களைக்கொண்டு நீரை உறிஞ்சி, காயவைத்து, மறுபடியும் மழையைப் பெய்விக்கிறான்.

एष सुप्तेषु जागर्ति भूतेषु परिनिष्ठितः ।
एष एवाग्निहोत्रं च फलं चैवाग्निहोत्रिणाम् ॥ २३ ॥

ஏஷ ஸுப்தேஷு ஜாக₃ர்தி பூ₄தேஷு பரிநிஷ்டி₂த: ।
ஏஷ ஏவாக்₃னிஹோத்ரம் ச ப₂லம் சைவாக்₃னிஹோத்ரிணாம் ॥

இவன் உறங்குபவருக்குள் விழித்துக்கொண்டிருப்பவன், எல்லா உயிர்களுக்குள்ளும் நிலைகொண்டிருப்பவன், இவனே வேள்வியாயும், வேள்வி செய்பவருக்குப் பயனாயும் இருப்பவன்.

वेदाश्च क्रतवश्चैव क्रतूनां फलमेव च ।
यानि कृत्यानि लोकेषु सर्व एष रविः प्रभुः ॥ २४ ॥

வேதா₃ச்₃ச க்ரதவச்₃சைவ க்ரதூனும் ப₂லமேவ ச।
யானி க்ருத்யானி லோகேஷு ஸர்வ ஏஷ ரவிஃ ப்ரபு₄ஃ ॥24॥

வேதங்கள், வேள்விகள், வேள்விகளின் பயன், மற்றும் உலகங்களில் எதெது செய்யப்படுகின்றதோ, எதெது இருக்கின்றதோ அவை அனைத்தையும் ஆள்பவன் இவனே.

एनमापत्सु कृच्छ्रेषु कान्तारेषु भयेषु च ।
कीर्तयन्पुरुषः कश्चिन्नावसीदति राघव ॥ २५ ॥

ஏனமாபத்ஸு க்ருச்ச்₂ரேஷு காந்தாரேஷு ப₄யேஷு ச ।
கீர்தயன் புருஷஃ கச்₃சிந்நாவஸீத₃தி ராக₄வ ॥ 25 ॥

ராமா ! இந்த சூர்யனை ஆபத்துக்களிலும் நெருக்கடிகளிலும், காடுகளிலும், மற்ற பயங்கள் ஏற்படுமிடங்களிலும் எவன் துதிசெய்கிருனே அவன் கஷ்டத்திற்கு ஆளாவதில்லை.

पूजयस्वैनमेकाग्रो देवदेवं जगत्पतिम् ।
एतत्त्रिगुणितं जप्त्वा युद्धेषु विजयिष्यसि ॥ २६ ॥

பூஜயஸ்வைனமேகாக்₃ரோ தே₃வதே₃வம் ஜக₃த்பதிம் ।
ஏதத்த்ரிகு₃ணிதம் ஜப்த்வா யுத்₃தே₄ஷு விஜயிஷ்யஸி ॥26॥

தேவர்களுக்கெல்லாம் தேவனையும் உலகிற்கெல்லாம் ஆண்டவனையும் இருக்கும் இந்த சூர்யனை ஒருமைப்பட்ட மனது கொண்டு பூஜை செய். இந்த ஆதித்ய ஹ்ருதயத்தை மூன்றுதரம் ஜபித்து போரில் வெற்றியை அடைவாய்.

अस्मिन्क्षणे महाबाहो रावणं त्वं वधिष्यसि ।
एवमुक्त्वा तदाऽगस्त्यो जगाम च यथागतम् ॥२७॥

அஸ்மின்க்ஷணே மஹாபா$_3$ஹோ ராவணம் த்வம் வதி$_4$ஷ்யஸி ।
ஏவமுக்த்வா ததா$_3$'க$_3$ஸ்த்யோ ஜகா$_3$ம ச யதா$_2$க$_3$தம் ‖27‖

இந்த நொடிப்பொழுதில் வீரனுன நீ ராவணனைக் கொல்லுவாய். இவ்வாறு அத்தருணத்தில் சொல்லிவிட்டு அகஸ்த்யர் தோன்றிய வழியே மறைந்தார்.

एतच्छ्रुत्वा महातेजा नष्टशोकोऽभवत्तदा ।
धारयामास सुप्रीतो राघवः प्रयतात्मवान् ॥ २८ ॥

ஏதச்ச்$_2$ருத்வா மஹாதேஜா நஷ்டசோகோ'ப$_4$வத்ததா$_3$ ।
தா$_4$ரயாமாஸ ஸுப்ரீதோ ராக$_4$வ: ப்ரயதாத்மவான் ‖ 28 ‖

இந்த ஆதித்யஹ்ருதயத்தைக் கேட்டு அப்போது ராமன் தன் ஆற்றல் ஓங்க, துயரற்றவனுக ஆனுன்; இன்புற்று நியமத்துடன் அதை ஏற்றுக் கொண்டான்.

आदित्यं प्रेक्ष्य जप्त्वा तु परं हर्षमवाप्तवान् ।
त्रिराचम्य शुचिर्भूत्वा धनुरादाय वीर्यवान् ॥ २९ ॥

रावणं प्रेक्ष्य हृष्टात्मा युद्धाय समुपागमत् ।
सर्वयत्नेन महता वधे तस्य धृतोऽभवत् ॥ ३० ॥

ஆதி$_3$த்யம் ப்ரேக்ஷ்ய ஜப்த்வா து பரம் ஹர்ஷமவாப்தவான் ।
த்ரிராசம்ய சுசிர்பூ$_4$த்வா த$_4$னுராதா$_3$ய வீர்யவான் ‖ 29 ‖

ராவணம் ப்ரேக்ஷ்ய ஹ்ருஷ்டாத்மா யுத்$_3$தா$_4$ய ஸமுபாக$_3$மத் ।
ஸர்வயத்னேன மஹதா வதே$_4$ தஸ்ய த்$_4$ருதோ'ப$_4$வத் ‖30‖

ஆசமனம் செய்து, தூய்மையை எய்தி, சூர்யனைப் பார்த்து மூன்றுதரம் ஜபித்து பெரும் களிப்பை அடைந்தான். பின் வில்லை ஏந்தி, களிப்புற்ற மனத்துடன், வீரனான ராமன், போருக்காக வந்திருக்கும் ராவணனை நோக்கி, தன் பெருமுயற்சியை முழுதும் செய்து அந்த ராவணனைக் கொல்வதில் உறுதிகொண்டான்.

अथ रविरवदन्निरीक्ष्य रामं मुदितमनाः परमं प्रहृष्यमाणः ।
निशिचरपतिसंक्षयं विदित्वा सुरगणमध्यगतो वचस्त्वरेति॥

அத₂ ரவிரவத₃ந்நிரீக்ஷ்ய ராமம் முதி₃த மனா: பரமம் ப்ரஹ்ருஷ்யமாண: ।
நிசிசரபதிஸம்க்ஷயம் விதி₃த்வா ஸுரக₃ணமத்₄யக₃தோ வசஸ்த்வரேதி ॥31॥

அதன்மேல் ராமனை நோக்கி இன்புற்ற மனதுடன் மிகவும் களிப்புற்றவனாக சூர்யபகவான் அரக்கர் தலைவனான ராவணனுக்கு ஏற்படப்போகும் அழிவைத் தெரிந்து, தேவர்களுக்கிடையே இருந்து "விரைவே செய்து முடி" என்று ராமனுக்குச் சொன்னான்.

इत्यार्षे श्रीमद्रामायणे वाल्मीकीये आदिकाव्ये
युद्धकाण्डे सप्तोत्तरशततमः सर्गः ॥

" இத்யார்ஷே ஸ்ரீமத்₃ ராமாயணே வால்மீகீயே ஆதி₃காவ்யே யுத்₃த₄காண்டே₃ ஸப்தோத்தரசததமஸ்ஸர்க₃: ॥

இப்படி ரிஷி செய்ததும் முதற்காவ்யமுமான வால்மீகி
ராமாயணத்தில் யுத்தகாண்டத்தில்
நூற்றேழாவது ஸர்க்கம்.

---

பாரதி விஜயம் பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை-5

# ஸ்ரீ சங்கர பகவத்பாதர்

அருளிய

## ஸ்தோத்ர நூல்கள்

கணேச பஞ்சரத்னம்
கனகதாரா ஸ்தோத்ரம்
மீனாக்ஷி பஞ்சரத்னம்
கோவிந்தாஷ்டகம்
பவானி புஜங்கம்
சுப்ரஹ்மண்ய புஜங்கம்
தேவி அபராதக்ஷமாபன ஸ்தோத்ரம்
சிவபஞ்சாக்ஷர ஸ்தோத்ரம்
தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்
சிவபுஜங்க ஸ்தோத்ரம்
அன்னபூர்ணாஷ்டகம்
ஹரிமீடே
காலபைரவாஷ்டகம்
வேதபாதஸ்தவம்
சிவபாதாதி கேசாந்த வர்ணன ஸ்தோத்ரம்
சிவகேசாதி பாதாந்த வர்ணன ஸ்தோத்ரம்

வெளியிடுவோர் :
ஜோதி நிலையம்
சென்னை-18

ஒவ்வொன்றும் ஸம்ஸ்கிருத மூலமும் தமிழில் பதவுரை பொழிப்புரையுடன் கூடியது.

ஒவ்வொன்றும் 0-25 பைசே